# தமிழகம்

சிறப்பு ஆசிரியர்: தவத்திரு குன்றக்குடி அடிகளார்

மலர் 5] குரோதி சித்திரை 29, 11—5—64 கிழமை இதழ். விலை – 10 காசுகள். [இதழ் 22, 23



அப்பர் தரும் விருந்து

## இறைவனைக் காண

விறகிலே தீ தெரிவதில்லை. அதனாலேயே அதிலே தீ இல்லை என்று கூறிவிடமுடியுமா? விறகை எரித்தால் தீ உண்டாகத்தானே செய்கிறது? அப்படியானால் விறகிலே தீ இல்லை என்று எப்படிக் கூறமுடியும்? விறகில் தீ நமது கண்ணுக்குத் தெரியாமல் மறைந்திருக்கிறது!

பாலிலே நெய் தெரிவதில்லை. அதனாலேயே பாலில் நெய் இல்லை என்று, கூறிவிடமுடியுமா? பாலைக் காய்ச்சித் தயிராகக் கடைந்து வெண்ணெய் எடுக்கிறோம். அந்த வெண்ணெய்யைக் காய்ச்சினால் புத்துருக்கு நெய் கிடைக்கத் தானே செய்கிறது? இதனால், பாலில் நெய் இல்லை என்று எப்படிக் கூற முடியும்? பாலில் நெய் நமது கண்ணுக்குத் தெரியாமல் மறைந்திருக்கிறது.

இப்படித்தான், விறகில் தீ போல, பாலில் நெய்போல மாமணிச் சோதியன் ஆன இறைவனும் அங்கிங்கெனாதபடி எங்கும் நிறைந்து நமது கண்ணுக்குத் தெரியாமல் மறைந்து நின்று அருள் சுரக்கிறான். விறகை எரித்துத் தீயைக் காண்பதுபோல, பாலைக்காய்ச்சித் தயிராக்கிக் கடைந்து வெண்ணெய் எடுத்து நெய்யைக் காண்பதுபோல, உறவு என்ற கோல்நட்டு, உணர்வு

(12-ம் பக்கம் பார்க்க)

# வாழ்விக்க வந்தோர் வரலாறு

## 37. திருநாவுக்கரசர்

முன்னுரை

மன்னிய சீர்த் திருத்தொண்டு இம் மண்ணுலகெல்லாம் வாழ, திருத்தொண்டின் நெறிபரவத் தோன்றிய ஞானத் தவமுனிவர் அப்பரடிகள். 'திரு நின்ற செம்மையே செம்மையாக்கொண்ட திருநாவுக் கரையன் தன் அடியார்க்கும் அடியேன்' என்று திருத் தொண்டத் தொகை பேசும். 'நாவுக்கரசு எனும் ஆரமணி' என்றும் சைவப் பெரு நெறிக்கே அணியன நாவுக்கரையர் பிரான் தன் அருந்தமிழே' என்றும் திருத்தொண்டர் திருவந்தாதி சிறப்பித்துப் பேசும். திருத்தொண்டர் புராணம் செய்த செந்தமிழ்ச் சேக்கிழார்,

'திருநாவுக் கரசுவளர்
திருத்தொண்டின் நெறிவாழ
வருஞானத் தவமுனிவர்
வாகீசர் வாய்மைதிகழ்
பெருநாமச் சீர்பரவ
லுறுகின்றேன்; பேருலகில்
ஒருநாவுக் குரைசெய்ய
ஒண்ணாமை உணராதேன்'

என்று அவையடக்கமாகக் குறிப்பிடுகின்றார்.

பிறப்பு

தமிழகத்தின் அழகிய நாடுகளில் திருமுனைப்பாடியும் ஒன்று. திருமுனைப்பாடியின் செழிப்பை - வளத்தை சேக்கிழார் பெருமான் பேசுகையில்,

'காலெல்லாம் தகட்டுவரால்
கரும்பெல்லாம் கண்பொழிதேன்
பாலெல்லாம் கதிர்ச்சாலி
பரப்பெல்லாம் குலைக்கமுகு
சாலெல்லாம் தரளநிரை
தடமெல்லாம் செங்கழுநீர்
மேலெல்லாம் அகில்தூபம்
விருந்தெல்லாம் திருந்துமனை'

என்கிறார். இத்தகு வளநாட்டிலேயுள்ள திருவாமூர் என்னும் திருப்பதியில், நன்மை நிலை ஒழுக்கத்து நலஞ்சிறந்த வேளாண் மரபில்

[11ம் பக்கம் பார்க்க]

# அடிகளாரின் சிந்தனை

எல்லோருடைய உடம்பிலும் இரத்தம் ஓடுகிறது. எனினும், இரத்தத்தின் தன்மை வெவ்வேறாக உள்ளது.

இயேசுநாதரின் உடம்பிலும் இரத்தம் ஓடியது-அவரைச் சிலுவையில் அறைந்தவர்கள் உடலிலும் இரத்தம் ஓடியது. இயேசுநாதரின் உடம்பில் ஓடிய இரத்தம் அன்பு இரத்தம்; மற்றவர்கள் உடம்பில் ஓடியது கொலை வழிச் சார்புடைய இரத்தம்?

நபிகள் நாயகம் உடம்பிலும் இரத்தம் ஓடியது— அவரைத் துரத்தியடித்துத் தொல்லை விளைவித்த அவர் பகைவர்கள் உடம்பிலும் இரத்தம் ஓடியது. நபிகள் நாயகம் உடம்பில் ஓடியது அமைதிவழி இரத்தம். அவர் பகைவர்கள் உடம்பில் ஓடியது பகைவழி இரத்தம்.

காந்தியடிகள் உடம்பிலும் இரத்தம் ஓடியது. அவரைச் சுட்டு வீழ்த்திய கோட்சேயின் உடம்பிலும் இரத்தம் ஓடியது. காந்தியடிகளின் உடம்பில் ஓடியது சாந்தம் தழுவிய இரத்தம். கோட்சேயின் உடம்பில் ஓடியது கொலைத் தன்மை தழுவிய இரத்தம்.

ஆழ்ந்து சிந்தனை செய்யுங்கள்.

உங்களுக்கு வேண்டியது,

இயேசுநாதரின் உடம்பில் ஓடிய இரத்தமா? அவரைச் சிலுவையில் அறைந்த குண்டர்கள் உடம்பில் ஓடிய இரத்தமா?

முகம்மது நபியின் உடம்பில் ஓடிய இரத்தமா? அவரைத் துரத்தியடித்த தீயவர்களின் உடம்பில் ஓடிய இரத்தமா?

காந்தியடிகள் உடம்பில் ஓடிய இரத்தமா? அவரைச் சுட்டுவீழ்த்திய கயவனின் உடம்பில் ஓடிய இரத்தமா?

ஆம்!

சான்றோர்கள் உடம்பில் ஓடிய இரத்தமே நமக்குத் தேவை. அதுவே நம்மை வழி நடத்தும்! வாழ்விக்கும்!

# அன்பின் பெருமை

## — தமிழ்நாவலர் புலவர் சி. அரசப்பனார் —

[திருச்சி நூற்றுக்கால் மண்டபத்தில் அருள்நெறித் திருக்கூட்டத்தின் ஆண்டுவிழாக் கவியரங்கத்தில் தமிழ் நாவலர், புலவர். சி. அரசப்பனார் பாடியது]

### மும்மூர்த்தி வணக்கம்

மலைமகள் அருளால் ஞான
கடம்புரி கருணை வள்ளல்
அலைகடல் நடுவண் நல்ல
அரிதுயில் துயிலும் ஐயன்
கலைமகள் அருளை எங்கள்
கருத்தினில் புகுத்தி இந்த
உலகினைக் கவிதை வெள்ளம்
உயர்த்துக என்று கேட்போம்.

### காரணம்

அன்பின் பெருமை தன்னை ஒரு
அன்பர் வரைக எனப்பணித்தார்
அன்பால் உலகம் வாழுவதை
அறிஞர் அறிவர் நாமறிவோம்
இன்பப் பொழுதை உடல்நலத்தில்
இன்னுணவில் போக்கு மாந்தர்
நன்மை எய்த வாழ்வெல்லாம்
நலத்தில் தோய வரைகின்றேன்.

அருள்நெறியைத் தமிழ்நாட்டில் பரவச் செய்ய
அன்புரையும் அருள்நோக்கும் பொருளும் கொண்டே
இருள்போக்கி ஒளிகூட்டி இன்பம் சேர்த்தே
எங்கலமும் சமுதாயம் எய்தி வாழ
அருள்கொண்டாய் தேவசிகா மணியே! எந்தன்
அன்புவலை தனில்பின்னல் நூலாய் ஆனாய்!
அருள்கவிதை மழைதேக்க வந்த அண்ணல்
அன்புடையீர்! அவையத்தீர்! வணக்கம் யார்க்கும்!

### அன்புரை

அருள்நெறியே உலகெல்லாம் பெருகி வாழ
அன்பமைத்த ஆண்டவற்கு வணக்கங் கூறி
இருள்நெறியைப் பின்பற்றும் மயக்கர் தம்மை
என்றென்றும் பெருநெறியே நோக்கிச் செல்ல
அருள்நெறியாம் பெருநெறியைப் புதுக்கி வைத்த
அன்பர்க்கும் அறிஞர்க்கும் கவிஞர் வாழ்த்து;
இருளறுத்த தவஞானி வாதவூர் வள்ளல்
இன்மொழியே அன்புரையாம் அதைச் சிறிது காண்பாம்.

அன்பின் பெருமை மாணவர்கள்
அறியும் வண்ணம் கலைக்கூடம்
நண்பால் பெருகி நலம்பெருகி
இன்பம் தழைத்து எழிலோங்கி
நன்மைக் குன்றாய் நாடுபுகழ்
நல்ல செயல்கள் பலசெய்து
முன்னோன் அருளே எய்திடுக!
முதன்மைத் தேர்வில் எய்திடுக!

### கடவுள்

அருளாய் விளங்கும் பேரிறைவன்
அன்பில் பிணைந்து திகழ்கின்றான்
மருளும் பகையும் பொய்யாவும்
மாளச் செய்யும் நல்லன்பு
பெருமைச் செயல்கள் அன்பொழியின்
பிறரை இகழச் செய்துவிடும்!
சிறுமைச் செயல்கள் என்றாலும்
சேர்ந்த அன்பால் சிறப்படையும்.

கல்வி அன்பு நிறைவிக்கும்
காலம் போற்ற அருள்நிறைக்கும்
கல்விக் கலைகள் அன்புழைப்பால்
கடவுள் அருளும் பெருஞ்செல்வம்
பல்கிப் பெருமை நிதம்வளர
பாரோர் போற்றத் தினம்மகிழ்வர்
கல்விப் பண்பு உயர்நலங்கள்
கற்றோர் அன்பால் நிறைந்தொளிரும்!

### குடும்பம்

அன்புக் குடும்பம் சுவைகொடுக்கும்
அறியா வறுமைப் பகைஅழிக்கும்
இன்பம் வளரத் துணையாகும்
எதிரி என்ற இருள்அழிக்கும்
அன்பால் உலகே நட்பாகும்!
அருமை வாழ்வு பெருமைபெறும்

இன்பம் கொடுத்தும் இன்பமுறும்
இன்பத் தாயே அன்பாவாள்!

## அன்புறுக

நாட்டில் மொழியில் அன்புறுக!
நலத்தில் உழைப்பில் அன்புறுக!
பாட்டில் கருத்தில் அன்புறுக!
பண்பில் தொண்டில் அன்புறுக!
ஏட்டில் கலையில் அன்புறுக!
எழுத்தில் இணைப்பில் அன்புறுக!
காட்டில் மலரும் மலர்க்கூட்டம்
களிப்பை அன்பால் தெரிவிக்கும்!

## அன்பாறு

திருமூலர் "அன்புசிவம்" என மொழிந்தார்.
திருவள்ளுவனார் "அன்பு உயிரே" என்றார்.
பெருமுனிவர் சங்கரனார் அன்புப்பாதை
பேரிமயம் எனச்சொல்லி ஒருமைகண்டார்.
ஒருமணியாம் மாணிக்க வாசகனார்
'அன்பன்பே" எனமொழிந்து கரைந்து நைந்தார்,
கருவன்பு தமிழன்பு இறையன்பாக்கும்
கடவுள்வரை அவ்வன்பை வளர்த்துச் செல்வோம்!

அன்பில்லா வாழ்க்கைஒரு வாழ்க்கை ஆமோ"
அறிவில்லாச் செயல்யாவும் உருவம் ஆமோ?
நன்மையெல்லாம் அன்புவழி கொண்டேவரும்
நாடெல்லாம் இணைந்துவர அன்புவேண்டும்
மென்மைதரும் நல்மனத்தை அன்புஈனும்
மேன்மையெலாம் அன்பொன்றே தந்துநிற்கும்
அன்புழைப்பால் காந்திமகான் புகழ வாழ்ந்தார்!
அவரன்பு பேரன்பு அதுவே கொள்வோம்.

## எதில் அன்பு!

இனியவற்றில் நாமன்பு கொள்ள வேண்டும்
எளிமைதனில் நாமன்பு கொள்ளவேண்டும்
கனிபோன்றே பயனுரைகள் பேச வேண்டும்
கடவுளின்மேல் உள்ளன்பு உந்த வேண்டும்
பனிஇமயம் முதல்குமரி நாடு எல்லாம்
பாரதமாய் நம்மன்பு வளர வேண்டும்
இனிஅன்பு கலையுணர்வில் இயற்கை தன்னில்
என்றென்றும் அவையாவும் கடவுள் அன்பே!

மாணவர்கள் தூய்மைஅதில் அன்பு கொள்க!
மட்டற்ற உழைப்புதனில் நாட்டங் கொள்க!
மாண்பென்னும் பெருமை நம்நாட்டில் வாழ
மாணவர்கள் பலமொழியும் கற்க வேண்டும்!
காணவரும் எதிர்காலம் பெரிதே ஆகும்
காட்சிகளும் மாட்சிகளும் ஒன்று அல்ல!
பேணிடுவீர் பலதுறையும் அறிவுக் கூறும்
பெருமையெலாம் பண்புமிகுசெயலால் வாழும்.

## அன்பின் எல்லை

அன்பால் கண்ணை அப்பிஅருள்
தன்பால் கொண்ட திண்ணப்பன்
முன்னோன் தன்முன் தோன்றிவிட
முழுமை எய்தி மிகப்பணிந்தான்
கண்ணும் மணியும் புகழ்ச்செயலும்
களிப்பும் உலகப் போற்றுதலும்
அன்பால் பெற்றார் உலகெல்லாம்
அருளால் பெற்றார் மெய்யடியார்.

தமிழும் அன்பும் வேறல்ல
தகவும் பண்பும் வேறல்ல
அமிழ்தும் உணவும் வேறல்ல
அகமும் புறமும் ஒன்றாகத்
தமிழே மனிதர்க் குயிர்நிலையாம்!
தமிழ்நூல் அனைத்தும் அன்புருவே!
உமியும் தவிடும் தமிழல்ல
உணர்வும் உயர்வும் தமிழாகும்,

## வேறு

அன்புவலையில் அகப்படும் மலையென
ஆண்டவன் நிலை உரைத்தார்.
அன்பால் அருட்பா வரைந்தவள்ளல்
அருள்நிலை தமிழ் நிலையே!
இன்பம் சுரக்கும் அன்பூற்று அதிலே
எவையும் வித்திப் பயிரிடலாம்
அன்பகல் கொண்டு சுயஇருள்நீக்கி
ஆருயிர் இன்பம் கொண்டுய்வோம்!

# எதுபிழை? எதுசரி?

சாமி பழனியப்பன்

(முன் தொடர்ச்சி)

## வாக்குத் தத்தம் செய்துவிட்டேன்

'நான் வாக்குத் தத்தம் கொடுத்து விட்டேன்' என்று பலர் கூறக் கேட்கிறோம். தத்தம் என்ற சொல் கொடுத்தல் ஆகிய வினையையே உணர்த்தும். எனவே, வாக்குக் கொடுத்தல் ஆகிய செயலைச் செய்தற்கு 'வாக்குத் தத்தம் செய்தல்' என்று கூறலாமே தவிர வாக்குத் தத்தம் கொடுத்தல் என்று கூறுவது பிழை. ஆதலின், 'நான் அவனுக்கு வாக்குக் கொடுத்து விட்டேன்' என்றோ 'வாக்குத் தத்தம் செய்துவிட்டேன்' என்றோ தான் கூறுதல் வேண்டும். அதுதான் சரி.

## கவனம் முழுவதையும்

அவன் தன் கவனத்தை முழுவதையும் இந்தச் செயலை வெற்றியாக நிறைவேற்றுதலிலேயே செலுத்தினான் என்று பலர் பேசுகின்றனர் - எழுதுகின்றனர். கவனத்தை முழுவதையும் என்று ஐகாரம் சேர்க்க வேண்டியதில்லை. கவனம் முழுவதையும் என்று கூறினாலேயே போதும். எனவே, 'அவன் தன் கவனம் முழுவதையும்' இந்தச் செயலை வெற்றியாக நிறைவேற்றுதலிலேயே செலுத்தினான் என்று எழுதுதலே சரி.

## பட்டணம் பட்டினம்

பட்டணம், பட்டினம் என்னும் இரு சொற்களுக்கும் உள்ள பொருள் வேறுபாடு புரியாமல் பலர் இவ்விரு சொற்களையும் பிழையாகப் பயன்படுத்துவதைக் காண்கிறோம். கடற்கரை நகராயின் பட்டினம் என்றும் கடற்கரை இல்லாத பெரு நகராயின் பட்டணம் என்றும் எழுதுவதும் பேசுவதுமே சரி. எடுத்துக்காட்டாக, சென்னை, மதுரை இரண்டையும் கொள்ளலாம். சென்னை பட்டினம்—மதுரை பட்டணம்.

## மனம்

மனம் என்பது மிக்குயர்ந்த தூய தமிழ்ச் சொல். அதை 'மனஸ்' என்றும், மனது என்றும், மனசு என்றும் பிழைபட எழுதியும், பேசியும் வருகின்றனர். 'மனம்' என்ற தூய தமிழ்ச் சொல் வேற்றுமை யுருபுகள் பெற்றுவரும் போது அத்து சாரியை பெற்றேவரும். மனத்தை, மனத்தால் — மனத்திற்கு மனத்தில்-மனத்தின் என்றே எழுதவும் பேசவும் வேண்டும். அதுதான் சரி.

## தண்ணீர்-வெந்நீர்

கொஞ்சம் தண்ணீர் கொடுங்கள் என்று கேட்டால் பச்சைத் தண்ணீர் வேண்டுமா? சுடுதண்ணீர் வேண்டுமா? என்று இயல்பாகக் கேட்பதைக் காண்கிறோம். 'தண்' என்றாலே, குளிர்ந்த என்றுதான் பொருள். ஆதலின், தண் + நீர் = தண்ணீர் என்றால் குளிர்ந்த நீரையே குறிக்கும். பச்சைத் தண்ணீரா, குளிர்ந்த தண்ணீரா என்று கேட்கவேண்டியதில்லை.

அடுத்து 'வெம்மை' என்றால் வெப்பமான—சூடான என்றுதான் பொருள். ஆதலின், வெம்மை + நீர் = வெந்நீர் என்றால் சுடுநீரையே குறிக்கும். சுடு தண்ணீரா என்று கேட்கவேண்டியதில்லை.

தண்ணீரா? வெந்நீரா? என்று கேட்பதே சரி.

## அக்கரை—அக்கறை

அக்கரை, அக்கறை இரு சொற்களுக்கும் உள்ள பொருள் வேறுபாடு தெரியாமலேயே பலர் இந்தச் சொற்களைப் பயன்படுத்தி வருகின்றனர். 'அக்கரை' என்பது அந்தக் கரையைக் குறிக்கும், அ + கரை என்பது அக்கரை யாயிற்று, 'அக்கறை' என்பது ஈடுபாடு, விழிப்பு, கவனம் என்னும் பொருளைக் குறித்து நிற்கும். அந்தக் கரை என்பதை யுணர்த்த 'அக்கரை' என்றும், ஈடுபாடு, விழிப்பு, கவனம் என்பதை யுணர்த்த 'அக்கறை' என்றுமே எழுதவேண்டும். அதுதான்சரி.

## மடத்துத் தலைவர்

திருமடத்தின் தலைவர்களைக் குறிக்க 'மடத்தலைவர்' என்ற சொல்லை, சிலர் தெரிந்தோ, தெரியாமலோ பிழைபடப் பயன்படுத்தி வருகின்றனர். மடம் + தலைவர் என்பதை 'அத்து' சாரியை சேர்த்து 'மடத்துத் தலைவர்' என்று எழுதுவதுதான் சரி. மடத் தலைவர் என்பது பிழை.

(வளரும்)




# தமிழகம்

அன்பாலே மக்கள்குலம் இணைந்து வாழும் அருள்நெறியைப் பரப்புதலே எங்கள் நோக்கம்

மலர் 5] 11—5—64 [ இதழ் 22, 23


## விரும்பத்தக்கதல்ல

தமிழர் தலைவர் பெரியார் ஈ. வெ. ராமசாமி அவர்கள் மதஎதிர்ப்புப் பிரசாரத்தை நடத்தத் திட்டமிட்டிருக்கிருர். அவர், மதப் பிரச்சாரம் பெருகி வருகிறது என்பதை இதற்குக் காரணமாகக் கூறுகிருர். நம்மைப் பொறுத்தவரையில், தலைவர் பெரியார் அவர்களுடைய இம் முயற்சியை முழுமனத்தோடு வரவேற்க முடியவில்லை. அவருக்கு சமுதாய சீர்திருத்தம் நோக்கமா? அல்லது ஒன்றை எதிர்ப்பது நோக்கமா? சமுதாய முன்னேற்றத்திற்கு முட்டுக்கட்டையாக இருக்கிற ஒன்றை எதிர்த்து ஒழித்தால் தானே சமுதாயம் முன்னேற முடியும் என்று கூறலாம். மதத்தை அவர் எதிர்க்கிருரா? மதத்தின் பேரால் வளர்ந்துள்ள மூடப் பழக்க வழக்கங்களை எதிர்க்கிருரா என்பது தெளிவாக வேண்டும். மதம் அல்லது சமயம் மனித குலத்தினுடைய உறவுக்கும் ஒன்றுபட்ட வளர்ச்சிக்கும் இன்றியமையாத ஒன்று என்பது இன்றையச் சான்ரேரின் முடிவு. நாம் இங்கு குறிப்பிடுகிற சமயம் வெறும் கற்பனையிலும், நம்பிக்கையிலும் மட்டுமே தோன்றி வளர்ந்துள்ளதன்று: வரலாற்றுப் பார்வையிலும், விஞ்ஞான ரீதியிலும் மனிதனின் அக வளர்ச்சியைத் தொட்டு வளர்க்கும் சமயம் ஒன்று உண்டு. அந்தச் சமய நெறி காழ்ப்புகளுக்கு அப்பாற்பட்டது, விருப்பு வெறுப்புகளுக்கு அப்பாற் பட்டது. அத்தகு சமய நெறி மக்களிடையே வளம் பெற்று உரம் பெற வேண்டும்.

நாமும் அருள் நெறித் திருக்கூட்டமும் சமயச்சார்பான சமுதாயத்தையே விரும்புகிரேம். அதற்காக அக்கொள்கைக்காக அருள் நெறித் திருக் கூட்டம் பரிந்து போராடும். சமயத்தின் பேரால் எழும் பிற்போக்கு வாதங்களை அது எதிர்த்துச் சாடும். அதே காலத்தில் மத எதிர்ப்பு என்னும் பெயரால் மனித வாழ்வியலுக்கு இன்றியமையாத் தேவையான சமய நெறியை எதிர்ப்பதையும், மனித சமுதாயத்தில் கருத்துப் புரட்சியைத் தோற்றுவித்து நல்லாற்றுப் படுத்துகிற திருமுறைகளை எதிர்ப்பதையும் நாம் அனுமதிக்க முடியாது. இந்தப் பிற்போக்கு வாதத்தையும் நாத்தீக வாதத்தையும் தடுத்து நிறுத்தி முறியடிக்கின்ற வகையில் அருள் நெறித்திருக்கூட்டப் பிரச்சாரம் மிக விரைவாகவும், வேகமாகவும் நடத்தப் பெறும். தலைவர் பெரியார் அவர்கள் மீண்டும் தன் திட்டத்தைப் புனர்பரிசிலனை செய்து, அழிக்கும் முயற்சியை விடுத்துத் திருத்தும் முயற்சியில் ஈடுபடவேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிரேம்.

—அடிகளார்




# செய்க பொருளை

தவத்திரு குன்றக்குடி அடிகளார்

பொருளியல் சாத்திரம் மிகவும் நுட்பமான தொன்று. பொருளியல் பற்றிய அறிவு மக்களிடத்து மிகுந்தாலேயே நாட்டுப் பொருளியலின் தரம் நிலைபேறுடையதாக இருக்க முடியும். அரசு பணமுடைப் படுகிறது என்று சொன்னால், அரசுக்கு என்ன பண முடை? அவர்கள் தாம் நோட்டு (Currency Notes) அடித்துக் கொள்ளலாமே என்று அறியாத மக்கள் சொல்லுகிறார்கள். நாட்டில் உள்ள பொருள் ஆக்கத்திற்கு ஏற்றவாறே நாணயங்களை—நோட்டுகளை அரசு வெளியிட முடியும். பொருளின் மதிப்பைத் தாங்கி வருகின்ற ஒரு சின்னமே நாணயம். பொருளின்றிச் சின்னம் இருப்பின் மதிப்பிராது.

பழங்காலத் தமிழ் இலக்கியங்களிலும்கூட பொன்வேறு பொருள்வேறு என்று பகுத்துப் பிரித்தே பேசப்பட்டு வந்திருக்கிறது. பரிபாடல் 'பொன் பொருள் போகம்' என்று முறை வைத்துப் பேசுகின்றது.

மக்களினத்தில் சுலபமான பொருள் கொடுக்கல் வாங்கலுக்காக (பரிவர்த்தனைக்காக) நாணயமாற்றுமுறை வந்ததேயொழிய நாணயத்தின் செல்வாக்குப் பெருகுவதற்காக அன்று. ஆனால், சாதாரண மக்களிடத்தில் நாணயத்திற்கு மதிப்புக்கூடி, பொருளுக்கு மதிப்புக் குறைந்துவிட்டது. ரூ. 1000 பெருமதிப்புடைய மாடுகள் வைத்திருப்பவனை நாடு மதிப்பதில்லை. ஆனால், ஒரு தங்க மோதிரம் போட்டவனை மதிக்கிறது. 40 ரூபாய் விலைமதிப்புள்ள நெல்லை, அணிலும் எலியும் தின்ன, போதிய பாதுகாப்பின்றி வெளியில் போட்டிருக்கின்றான். ஆனால், 4 அணா காசை துணியில் முடிந்து, பெட்டியில் பூட்டிப் பத்திரப் படுத்துகின்றான். மக்கள் இப்படியிருந்ததால் ஆட்சியாளர் வரிகள் மூலம் நாணயம் திரட்டிக் குவித்தனர். இப்படி நாணயத்தின் மதிப்புப் பெருகியதால் பொருள் செய்யும் விருப்புக் குறைந்து. பணம் சம்பாதிக்கும் ஆசை பெருகியது. அதனால், மறைமுகமான சுரண்டல் முறைச் சமுதாயம் தோன்றியது, வட்டித் தொழில், வாணிகம் போன்ற அதிக உழைப்புத் தேவையில்லாத — உற்பத்திக்கே தொடர்பில்லாத - குறுகிய வழிமுறைகளில் அல்லது இரவு முதலிய இழிவான வழிகளில் பணத்தை அடைய முயலும் எண்ணம் வளர்ந்தது. நாட்டின் பொருள் வளம், சீர்குலைந்தது. வறுமை பெருகியது. இதனையுணர்ந்த திருவள்ளுவர், பணத்தின் மீது இருக்கும் ஆசையை, பொருள் உற்பத்தியின் மீது திருப்ப விரும்புகிறார், நாட்டின் முதல் மனிதனாகிய அரசனைப் பார்த்துக் கேட்கிறார் — இல்லை — கோபக்குறியுடன் ஆணையிடுகிறார். வரி வரி என்று நாணயங்களை வாங்கிக் குவிப்பதற்குப் பதிலாக, அயல் நாடுகளிலிருந்தெல்லாம் செல்வத்தைக் கொண்டுவருதற்குக் காரணமான - அவர்கள் விரும்பும் பொருள்களைச் செய்க! அவ்வழி நாட்டை நடத்துக என்று ஆணையிடுகிறார். அப்பொழுது பகையொடுங்கும்! பார் செழிக்கும்!

செய்க பொருளைச் செறுநர்
செருக்கறுக்கும்
எஃகதனிற் கூரிய தில்

—குறள்

# செய்திச் சுருள்

## நீடாமங்கலம் ஸ்ரீ சந்தான ராம சுவாமி கோயில் விழா

நீடாமங்கலம் ஸ்ரீ சந்தான ராமசுவாமி கோயில் பிரமோத்சவசங்கீத சொற்பொழிவு விழா 20-4-64ல் தொடங்கியது. 21-4-64ல் தவத்திரு அடிகளார் அவர்கள், ஸ்ரீ சந்தான ராமசுவாமி கோயிலுக்குச் சென்று வழிபாடுசெய்தார்கள். பின்னர், 'வழித்துணை' என்பது பற்றி அரியதோர் உரையாற்றினார்கள்.

## சிங்கம்புணரி ஊராட்சி ஒன்றிப்பு பள்ளி விழா

சிங்கம்புணரி பஞ்சாயத்து ஒன்றிப்பைச் சேர்ந்த வாராப்பூர், சடையம்பட்டி உயர் தொடக்கப் பள்ளிகளின் ஆண்டுவிழா 22-4-64ல் பஞ்சாயத்து ஒன்றிப்புத் தலைவர் திரு. வெ. வால்மீகி தலைமையில் நடைபெற்றது. ஆணையர் திரு. ப. பழனிச்சாமி சொற்பொழிவாற்றினார். துணைத் தலைவர் திரு. மூ. அ. ந. அழகு பரிசுகள் வழங்கினார். தவத்திரு அடிகளார் அவர்கள் வாழ்த்துரை வழங்கினார்கள். திரு. எம். எஸ். செல்வராசு நன்றி கூறினர்.

## சடையம்பட்டியில் பள்ளி ஆண்டு விழா

சடையம்பட்டி, பஞ்சாயத்து யூனியன் உயர்தர ஆரம்பப்பள்ளி ஆண்டுவிழா 22-4-64ல் தவத்திரு அடிகளார் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. திருமயம் சரக பள்ளித் துணை ஆய்வாளர் திரு. வை. பக்கிரிசாமி செட்டியார் 'கம்பன் கண்ட காவியம்' என்பது பற்றியும், புதுக்கோட்டை ஆர். சி. ஆகாரப்பள்ளித் தலைமை ஆசிரியை குமாரி. கி. இராதாபாய் B. SC., B.T. 'முன்னேற்றப் பாதையில்' என்பது பற்றியும், புதுக்கோட்டை டி. இ. எல். சி. உயர்நிலைப் பள்ளித் தமிழாசிரியர் திரு. இரா. சொக்கலிங்கம் 'எழுச்சியா? இலக்கியமா? என்பது பற்றியும் சொற்பொழிவாற்றினார்கள்.

தவத்திரு அடிகளார் அவர்கள் 'சிலம்பின் பாததிரங்கள்' என்பது பற்றிச் சிறந்ததோர் உரையாற்றினார்கள்.

சடையம் பட்டி நிகழ்ச்சி முடிந்ததும், தவத்திரு அடிகளார் அவர்கள் பிரான்மலைக்குச் சென்று அங்கு, ஸ்ரீ அமிர்தேஸ்வரி கொடுங்குன்றநாதரை வழிபட்டு, பின் குன்றக்குடிக்கு வந்துசேர்ந்தார்கள்.

## தமிழகப் புலவர்குழு

தமிழகப் புலவர்குழுவின் 15-வது கூட்டம் மே 23, 24, ஆகிய இருநாட்களிலும் முறையே பெங்களூர் துர்வாணிக நகர் தமிழ் மன்றத்திலும் பெங்களூர் தமிழ்ச் சங்கத்திலும் நடைபெறும் என்றும், புலவர்குழுவை வரவேற்கும் பொதுமக்களின் பெருங்கூட்டம் இரு நாட்களிலும் மாலை நேரத்தில் நடைபெறும் என்றும் திரு. கி. ஆ. பெ. விசுவநாதம் அறிவிக்கிறார்.

## கழனிவாசல் இலக்கிய மன்ற ஆண்டுவிழா

கழனிவாசல் (கீ. புதுப்பட்டி) கழக உயர்நிலைப் பள்ளியின் நக்கீரர் மாணவ இலக்கிய மன்ற ஆண்டு விழா 23—4—64ல் தவத்திரு அடிகளார் அவர்கள் தலைமையில் நடைபெற்றது.

விவேகாநந்தர் படத்தைத் தவத்திரு அடிகளார் அவர்களும், திரு. வி. க. படத்தை திரு. பா. நமசிவாயமும், திறந்துவைத்தார்கள். பின்னர் தவத்திரு அடிகளார் அவர்கள் 'தமிழும் சைவமும்' என்ற தலைப்பில் சிறப்புச் சொற்பொழிவாற்றினார்கள். பிறகு, இராமாயணத்தில் ஆண்மைபடைத்த வீரன் இராவணனு, இலக்குவணனு என்ற தலைப்பில் ஒருபட்டி மன்றம் நடைபெற்றது. தவத்திரு அடிகளார் அவர்கள் பட்டிமன்றத்தின் நடு

வராக இருந்து தீர்ப்பு வழங்கினார்கள். குழுத்தலைவர்களாக திரு. பா. நமசிவாயமும், திரு. வை. பக்கிரிசாமியும் இருந்தனர்.

## அரிமளத்தில் வழயனுப்பு விழா

அரிமளம் ஊராட்சி ஒன்றிப்பு ஆணையர் திரு. எஸ். பூவராகசாமி மாற்றலாகிச் செல்வதை முன்னிட்டு, 23—4—64ல் கிராம நிலை மண்டல காங்கிரஸ் கமிட்டி சார்பில் வழியனுப்புவிழா தவத்திரு அடிகளார் அவர்களின் தலைமையில் நடைபெற்றது.

சேலம் இலக்கிய மன்றத்தின் முதலாவது இலக்கியப் பெருவிழா 25-4-64ல் திரு. நாரண துரைக்கண்ணன் தலைமையில் தொடங்கியது. திரு. ராமகிருஷ்ணன் அனைவரையும் வரவேற்றார். தவத்திரு அடிகளார் அவர்கள் விழாவைத் தொடக்கி வைத்தார்கள். திரு. அ. ச. ஞான சம்பந்தர் 'வள்ளுவர் உவமைகள்' என்பது பற்றிப் பேசினார். திரு. ராய. சொக்கலிங்கம், 'வள்ளுவர் உள்ளம்' என்பது பற்றிப் பேசினார்.

## கீரமங்கலம் இலக்கிய மன்ற ஆண்டுவிழா

கீரமங்கலம் மையம் ஆரம்ப ஆசிரியர் சங்க 27-வது ஆண்டுவிழா, 24-4-64ல் பேராவூருணி வட்டார பள்ளித் துணைத் தணிக்கையாளர் திரு. லா. ச. இராமதுரை தலைமையில் நடைபெற்றது. திரு. மு. சி. பாலசுப்பிரமணியம் தேசியக் கொடியை ஏற்றிவைத்தார். 'வள்ளுவர் கண்ட வாழ்வு' என்ற தலைப்பில் தவத்திரு அடிகளார் அவர்கள் சிறப்புரை யாற்றினார்கள், திரு. கோ நேசையன் பரிசுகள் வழங்கினர்.

## திருச்சி அருள் நெறித் திருக்கூட்டம்

திருச்சி அருள்நெறித் திருக்கூட்டத்தின் பேரவைக் கூட்டம் 26—4—64 காலை 10 மணி அளவில் திருச்சி தேவர் மன்றத்தில் நடைபெற்றது. 'அருள் நெறிப் பணியில் நாம் இதுவிரை செய்தது என்ன? இனிச் செய்ய வேண்டியன யாவை?' என்பவற்றை விளக்கி தவத்திரு அடிகளார் அவர்கள் விரிவாகப் பேசினார்கள். செயலர் திரு. சொ. கிருஷ்ணன் திருச்சி அருள் நெறியாளர்களுக்கும், அவர்களது பணிக்கும் மகிழ்ச்சி தெரிவித்து, அவர்கள் தொடர்ந்து பணியாற்ற வேண்டுமென்று கேட்டுக் கொண்டார். அது சமயம் தேர்ந்தெடுக்கப் பெற்ற நிருவாகக்குழு.

தலைவர்: திரு ஆர். ஜெயதேவன் செட்டியார். துணைத் தலைவர்கள் திரு. ஏ. பி. ஏ. இராமலிங்கம் செட்டியார், திரு. அ. வெ. ர கிருஷ்ணசாமி ரெட்டியார். செயலர் திரு. சொ. கிருஷ்ணன். இணைச் செயலர் திரு சா. பெரியசாமி. துணைச் செயலர்கள் திரு. மா. சொக்கையன், திரு. கோ, ஆடிய பாதம், திரு. வீ. க. சேதுரத்தினம்.

**குழு உறுப்பினர்கள்.**

திருவாளர்கள்: ஜி. முருகேசன் செட்டியார், டி, எல். வி. கோவிந்த ராஜுலு, டி. எம். முத்துசாமி பிள்ளை, என். எஸ். எஸ். கணபதியா பிள்ளை, என். இராமலிங்கம் செட்டியார், ஏ. முத்துக்கிருஷ்ணன், ஏ. வி. கே. ஆவிச்சி செட்டியார், எம். அகிலாண்டம் பிள்ளை, டி. பி. இரத்தினம் பிள்ளை, மூக்க பிள்ளை, லெ. அருணாசலம் பிள்ளை. க. சிதம்பரம் பிள்ளை, வை. தட்சணாமூர்த்தி, பி. சுப்பராயலு செட்டியார். ★

## அடிகளார் சுற்றுப்பயணம்

13-5-64 இரவு 7-00 நெடுவாசல் (தங்கல் — மாயவரம் வழித்தங்கல் மனை) தஞ்சை மாவட்டம்.

14-5-64 மாலை 6-00 வரகுக்கோட்டை (தங்கல் — தஞ்சை, பொது நலத்துறை மனை) தஞ்சை மாவட்டம்.

இரவு 8-00 மாரியம்மன் கோவில் (தங்கல்—தஞ்சை, பொது நலத்துறை மனை) தஞ்சை மாவட்டம்.

(2-ம் பக்கத் தொடர்ச்சி)

குறுக்கையர்தம் குடியிலே புகழனார் என்பார் ஒருவர் இருந்தார். அவர் தமக்குரிமைப் பொருவில் குலக்குடியில் தோன்றிய மாதினியார் என்ற குலக்கொடியை மணம் புரிந்து, அன்பும் அறனும் தழுவிய இல்லறவாழ்க்கையை மேற்கொண்டொழுகினார். விருந்தோம்பலிலும் சுற்றந்தழுவி வாழ்வதிலும் சிறந்து விளங்கினார்.

இவ்வாறு, இல்லறமாம் நல்லறத்தை இனிது நடத்தி வருநாளில் புகழனாருக்கும் மாதினியாருக்கும் திருவனைய திலகவதியார் பிறந்தார், யாண்டு சில கழிந்தன, பின்னர், அலகில் கலைத் துறை தழைப்ப - அருந் தவத்தோர் நெறிவாழ - உலகில் வரும் இருள் நீக்கி ஒளிவிளங்கு மணிபோல மருள் நீக்கியார் அவதரித்தார். புகழனார் மருள் நீக்கியாரை மிக்க அன்போடு வளர்த்தார். செழுங்கலையின் திறமெல்லாம் முந்தை முறையில் பயிற்றுவித்தார். மருள் நீக்கியார் பல்கலையும் பயின்று மாசற்ற இளம் பிறை போல் வளர்ந்தார். திலகவதியும் வளர்ந்தார். திலகவதிக்குப் பன்னிரண்டாண்டுகள் நிரம்பின.

## திலகவதியாரின் திருமணப் பேச்சு

கலிப்பகையார் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் வேளாளர் குடிப் பிறந்தவர். மின்னார் செஞ்சடை அண்ணலின் மெய்யடியார் சேனாபதியாகப் பணிபுரிந்தார். அவர், திலகவதியாரை மணம்புரிய விரும்பி, பெரியோர் சிலரை பூன்ற கொடைப் புகழனார்பால் பெண் கேட்டுவர அனுப்பினார். புகழனாரிடம் சென்று கலிப்பகையார்தம் கருத்தறிவித்தனர். புகழனார், வந்தவர்களிடத்துக் கலிப்பகையாரின் குணங்களையும், குல முறையையும் விசாரித்தறிந்தார். பின்னர், திலகவதியாரைக் கலிப்பகையாருக்குத் திருமணம் செய்து கொடுக்க ஒப்பினார். பின்னர், அப்பெரியவர்கள் கலிப்பகையாரிடம் வந்து, இந்த மகிழ்ச்சிச் செய்தியை அறிவித்தனர்.

ஐயகோ! திருமணம் நிகழ்வதற்குள், வட புலத்தே போர் மூண்டது! கலிப்பகையார் களத்திற்கு அனுப்பப் பெற்றார். மூண்ட நெடும்போர் முடிந்திலது - அது நீண்ட நெடுநாள் தொடர்ந்தது!

## திலகவதியாரின் பெற்றோர் மறைவு

வடபுலத்தே மூண்டபோர் முடியவில்லை. அந்தோ! தூய குலப் புகழனார் பிணியுற்று இம் மண்ணக வாழ்வைத் துறந்தார். அவர் உயிர் துறக்கவே, அவர்தம் அருமைத் துணைவியாரான மாதினியாரும் கற்புநெறிவழுவாமல் கணவனாருடன் சென்றார். திலகவதியாரும் மருள் நீக்கியாரும் பெற்றோரை இழந்து துயர்க்கடலில் அழுந்தினர்—பின், உற்றாரும் உறவினரும் தேற்றத் தேறினர். அவ்விருவரும் பெற்றோர்க்கு ஆற்ற வேண்டிய இறுதிக் கடனை ஆற்றினர்.

அம்மட்டோ! வட புலத்தே மூண்ட கடும்போரில் கலிப்பகையார், உயிர் கொடுத்துப் புகழ் கொண்டார். செய்தியறிந்த திலகவதியார் செய்வதறியாமல் சிந்தை கலங்கினார். என்பெற்றோர், என்னைக் கலிப்பகையாருக்கு மணம் பேசி முடிவு செய்திருத்தலால் எனது உயிர் அவருடையதாயிற்று. எனவே, இவ்வுயிரையும் அவர் உயிரோடு போக்குவேன்' என்று துணிந்தார். இந்நிலையில், மருள்நீக்கியார் திலகவதியாரை வணங்கி, 'ஐயகோ! நம் பெற்றோர் இவ்வுலகைத் துறந்த நாள் தொடங்கி தங்களையே அவ்வாறு கருதி வாழ்கின்றேனே! என்னைத் தனித்திருக்க விடுவதாயின் என்னுயிரை முன் போக்குவேன் என்று புலம்பினார். 'தம்பி, உலகில் வாழ்தல் வேண்டும்' என்னும் வேட்கையாலும், தம்பியை வளர்ப்பது தம்கடமை என்று உணர்ந்ததாலும் திலகவதியார் அம்பொன்மணி நூல் பூணாமல், அனைத்துயிர்க்கும் அருள் தாங்கி இல்லத்திலேயே தவம் புரியலானார். மருள்நீக்கியார் மனத்துயர் ஒழிந்தார்.

(வளரும்)

---

# உலகத் தலைவன் இறைவன்

உலகத்தை ஒருமைப்பாட்டு நெறியில் அமைக்க ஒரே தலைமை உணர்வு தேவை. உலகியல் தலைவர்களை, குறுகிய நாட்டுப்பற்று—இனப்பற்று—மொழிப்பற்று—சமயப்பற்று ஆட்கொண்டிருக்கும். உலகத்தலைவன் விருப்பு வெறுப்பு அற்றவனாக—வேண்டுதல் வேண்டாமை இல்லாதவனாக—சாதிச் சழக்கற்றவனாக—பொதுவானவனாக இருக்க வேண்டும். அவன் இறைவன் ஒருவனே!

-அடிகளார்

Registered No. M- 7827 THAMILAGAM. Weekly 11-5-64

என்னும் கயிற்றினுல் முறுக வாங்கிக் கடைந்தால் எங்கும் நிறைந்துள்ள இறைவனை நாம் காணமுடியும்; இறைவனின் திருவருள் இன்பத்தை நாம் பெற்று அனுபவித்துப் பேரின்ப வாழ்வு எய்தக்கூடும். இதனை அப்பரடிகள் கூறுகிருர், பாருங்கள் :

'விறகில் தீயினன் பாலில்படு நெய்போல்
மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்
உறவுகோல் நட்டு உணர்வுக் கயிற்றினுல்
முறுக வாங்கிக் கடையமுன் நிற்குமே'






## தாழ்வாரமும் சமுதாயமும்

வீட்டுத் திண்ணையில் முன்னே தாழ்வாரம் இருந்தால் வெளி வெப்பமும், தட்பமும் தாக்காத வண்ணம் மகிழ்வோடு வசிக்கலாம். தாழ்வாரம் இல்லையானுல், வெப்பமும் தட்பமும் வீட்டில் உள்ளவர்களைத் தாக்கவே செய்யும். அதுபோலத்தான், சமுதாயம் என்ற தாழ்வாரம் இருந்தால் அதனுள்ளடங்கிய தனிமனிதனின் வாழ்க்கை இன்பம் தழுவியதாக இருக்கும்.

—அடிகளார்

வெளியிடுவோர், ஆசிரியர்: ஆறு. சுப்பிரமணியன், அடிகளார் அச்சகம், குன்றக்குடி, இராமநாதபுரம் மாவட்டம். துணை ஆசிரியர்: சாமி பழனியப்பன்.